POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6-TN-MS C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# சென்னைக்கு புயல் அபாயம் நீங்கியது

## நெல்லூர் அருகே 100 கிலோமீட்டர் வேகத்தில் கரையை கடக்கும்

Regd. No. TN-MS (C) 422 Phone 420212 4 பக்கம் விலை 60 காசு

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

[மலர் 10] சென்னை 17-11-1985 ஞாயிறு வெளியூர் 18-11-1985 திங்கள் [இதழ் 30]




சென்னை, நவ. 17- சென்னையை அச்சுறுத்திக் கொண்டிருந்த பயங்கரப் புயல் அபாயம் நீங்கியது. ஆனால் இந்தப்புயல் ஆந்திர மாநிலம் நெல்லூர் அருகே 100 கிலோ மீட்டர் வேகத்தில் கரையைக் கடக்கும் என்று வானிலை ஆராய்ச்சி நிலையத்தினர் எதிர் பார்க்கின்றனர்.

எதிர்பாராத விதமாக இந்தப் புயல் திசை மாறிதிரும்பிவீசினால்தான் சென்னைநகருக்கு அபாயம் ஏற்படும்.

வங்கக்கடலில் கடந்த சனிக்கிழமையன்று சென்னைக்கு நேர் கிழக்கே 500 கிலோ மீட்டர் தூரத்தில் இந்தப் புயல் மையம் கொண்டிருந்தது. நேற்று சென்னை நோக்கி நகர்ந்து 400 கிலோ மீட்டர் தொலைவில் மையம் கொண்டிருந்து இரவு சென்னைக்கு நேர் கிழக்கே 300 கிலோ மீட்டர் தொலைவில் மையம் கொண்டிருந்தது.

சென்னை நகரைநோக்கி 200 கிலோ மீட்டர் தூரம் வரை நகர்ந்து வந்த இந்தப் புயல் சென்னை நகரைத்தான் தாக்கும் என்கிற அச்சம் இருந்தது.

### பயங்கர புயல்

ஆனால் நள்ளிரவுக்குப் பின்னர் இந்தப் புயல் வடக்கு நோக்கி நகர்ந்து ஆந்திராவை நோக்கி மையம் கொண்டது, அப்போதும் கூட இந்தப் புயல் சென்னைக்கும நெல்லூருக்கும் இடையே கரையைக் கடக்கும் என்று எதிர் பார்க்கப்பட்டது. ஆனால் தற்போது சென்னை நகரிலிருந்து வெகுதூரம் வடக்குநோக்கி நகர்ந்து விட்டது. எனவே இந்த நிமிடம் வரை சென்னையை புயல் தாக்கும் அபாயம் இல்லை.

இந்தப் புயல்ஆந்திராவில் நெல்லூருக்கும் ஓங்கோல் நகருக்கும் இடையே கரையை கடக்கும் என்று விசாகபட்டினம் வானிலை ஆராய்ச்சி நிலையம் எதிர் பார்க்கிறது.

ஆந்திராவில் நூறு கிலோ மீட்டர் வேகத்தில் புயல் கரையை கடக்கும் என்று எதிர் பார்ப்பதால் சென்னை செங்கற்பட்டு வட ஆற்காடு மாவட்டங்களில் மழை பெய்யக்கூடும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

### அபாயக் கொடி

இந்தப் புயலால் ஆந்திர மாநிலத்தில் நெல்லூர் பிரகாசம் மாவட்டங்கள் பெரும் பாதிப்புக்கு உள்ளாகும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. கிருஷ்ணபட்டினம், நிஜாம்பட்டினம், மசூலிப்பட்டினம் ஆகிய துறைமுகங்களில் புயல் அபாயக்கொடிகள் உயர்த்தப்பட்டிருக்கின்றன.

காக்கினாடா, விசாகப் பட்டினம் துறைமுகங்களிலும் அபாயக் கொடிகள் ஏற்றப்பட்டிருக்கின்றன.

தமிழகத்தில் நாகபட்டினம் கடலூர் துறைமுகங்களில் உள்ளூர் அபாய எச்சரிக்கைக் கொடிகள ஏற்றப்பட்டிருக்கின்றன சென்னை நகரிலும் அபாய எச்சரிக்கை கொடி ஏற்றப் பட்டிருக்கிறது,

# ரஜினீஷ் சாமியார் இந்தியா திரும்பினார்

## "இனி இங்கேயே தங்குவேன்"

புதுடெல்லி, நவ. 17—உலகெங்கும் பரபரப்பை உண்டுபண்ணிய ரஜினீஷ் சாமியார் புதுடெல்லி வந்து சேர்ந்தார்

இந்தியாவில் புனே நகரில் முதலில் ஆசிரமம் அமைத்தார் ரஜினீஷ்.

உலகசமாதானத்துக்காகவும், வாழ்வில் முக்தி பெறவும், சித்தி பெறவும்—யாரும் எந்தப் பெண்ணுடனும் உடலுறவு கொள்ளலாம் என்பது செக்ஸ் சாமியார் என்று அழைக்கப்படும் ரஜினீஷின் "தாரக" மந்திரம்.

பணக்காரர்களின் சாமியார் என்றழைக்கபப்டும் ரஜினீஷிடம் ஏராளமான பணக்காரர்கள் சீடர்களாயினா.

பிரபல இந்திப்பட நடிகர் வினோத் கன்னாவும் அவரது சீடர்களில் ஒருவரானார்.

புனேயில் பல வெள்ளைக்கார அழகிகளுடன் நடந்த அந்தஆசிரமத்துக்கு பலத்த எதிர்ப்பு ஏற்பட்டது.

1981ல் திடீர் என்று அமெரிக்காவுக்கு ஓடினார் ரஜினீஷ்.

அங்கு ஓரிகன் என்றஇடத்தில் ஆசிரமம் அமைத்தார். அங்கு ஏராளமான பணக்கார பக்தர்கள் அவருக்கு சீடர்களாயினர். பலவிமானங்கள் மொர்சிடீஸ்கார்கள் ஆகியவற்றுக்கு அதிபதி ஆனார் ரஜினீஷ்.

உலகெங்கும் அவருக்கு 5 லட்சம் சீடர்கள் உருவாயினர்.

அவரது ஓரிகன் ஆசிரமத்தில்சேர பல பணக்கார சீடர்கள் முயன்றனர்.

அமெரிக்கரை திருமணம் செய்தால் அங்கேயே தங்கி விடலாம்.

இதற்காக அமெரிக்கரை மணந்துகொண்டதாக பலருக்கு போலி தஸ்தாவேஜுகள் தயாரிக்கப்பட்டன. அவர்கள் அமெரிக்காவில் ரஜினீஷ் ஆசிரமத்திலேயே வாழ்ந்தனர்.

### கடும் எதிர்ப்பு

அந்த ஆசிரமத்தில் நடக்கும் ஆடம்பர உல்லாச சல்லாபங்களுக்கு அமெரிக்காவில் எதிர்ப்பு கிளம்பியது.

அந்த ஆசிரமத்தைப் பற்றி புலன் விசாரணை செய்ப துப்பறியும் போலீசார் முயன்றனர்

அவர்களில் ஒருவரை கொல்ல ரஜினீஷ் சாமியாரும், அவரது உதவியாளர் ஷீலாவும் முயன்றனராம்.

அக்டோபர் 28ந் தேதி ரஜினீஷ் அமெரிக்காவிலிருந்து வெளியேற முயன்ற போது கைது செய்யப்பட்டார். கொலை செய்ய முயன்றதாகவும் முறைக்கேடாக திருமணம் நடத்தியதாகவும் திருமணம் நடத்திவைத்ததாவும் குற்றச்சாட்டு கூறப்பட்டது. சார்லட் நகரில் உள்ளநீதிமன்றத்தில்வழக்கு நடந்தது ரஜினீசுக்கு பத்தாண்டு சிறைத் தண்டனையும் 4 லட்சம் அமெரிக்க டாலர்அபராதமும்விதிக்கப் பட்டது.

### சிறைதண்டனை ரத்து

"நான் அமெரிக்காவில் இருக்கமாட்டேன் நாட்டை விட்டே ஓடி விடுகிறேன்" என்று ரஜினீஷ் கூறியதால் சிறைத் தண்டனை ரத்து செய்யப்பட்டது ஐந்துஆண்டுகாலத்துக்கு அமெரிக்கா பக்கமே வரக்கூடாது என்று கோர்ட் தீர்ப்பளித்தது.

4 லட்சம்டாலர் (ரூ 48 லட்சம்) அபராதத்தை ரஜினீஷ் செலுத்தியபின் விடுவிக்கப்பட்டார்,

பின்னர் அமெரிக்காவிலிருந்து 8 சீடர்களுடன் ரஜினீஷ் தனி விமானத்தில் புறப்பட்டார். விமானம் அயர்லாந்தில் ஷானோன் என்றஇடத்தில் மட்டும் இறங்கியது. சிறிது நேரத்துக்குப் பின் மீண்டும் புறப்பட்டு சைப்ரஸ் வந்தது. சைப்ரசில் லார்னாகா நகரில்கடற்கரை ஓரம் உள்ள ஆடம்பர ஓட்டலான பாம்பீச் ஓட்டலில் இரவு தங்கினார்

### புதுடெல்லி வந்தார்

அடுத்த நாள் காலை பயணம் தொடர்ந்தது. பாக்ரெய்ன் நாட்டுக்கு வந்து அங்கிருந்து இன்று புதுடெல்லிக்கு அவரது தனி விமானம் வந்து சேர்ந்தது.

சுமார் 500 சீடர்கள் அவருக்காக இரவு பகலாக டெல்லி விமான நிலையத்தில் காத்திருந்தனர், விமானம் வந்ததும் வாழ்த்து முழக்கத்துடன் சாமியாருக்கு வரவேற்பு அளிக்கப் பட்டது.

அந்தரங்க வாழ்க்கை முறையையும் பச்சையாக்கி கொச்சைப் படுத்துகிறார் என்று புகார் கூறப்பட்ட ரஜினீஷ் சாமியார் பச்சை நிறஅங்கி அணிந்து கொண்டு வைரக்கல் பதித்த கறுப்பு நிற தொப்பி அணிந்து விமானத்திலிருந்து இறங்கினார்.

கைத்தாங்கலாக ஒரு பெண் சீடர் ரஜினீஷை அழைத்து வந்தார். சுங்க இலாகா சோதனை நடந்த பின் விமான நிலையத்தை விட்டு வெளியே வந்தார்.

பல சீடர்கள் வாழ்த்து முழக்கங்களுடன் அவர் காலில் விழுந்து வணங்கினர். அவர்களில் பலர் பெண்கள்.

ரஜினீஷ் நல்ல ஆரோக்கியத்துடன் காணப்பட்டார்

பத்திரிகையாளர்களும், புகைப் படக்காரர்களும் ரஜினீசைச் சூழ்ந்து கொண்டனர்,

இமயமலையில் உள்ள குலு என்ற குளுகுளு வாசஸ்தலத்துக்குப் போகப்போவதாக ரஜினீஷ் கூறினார். அமெரிக்காவுக்கு இனி போகவே மாட்டேன் என்றும் அவர் சொன்னார்,

புனேயிலுள்ள பழைய ஆசிரமத்துக்கும் போகப் போவதில்லை என்றார் ரஜினீஷ்.

அமெரிக்காவில்ஜனநாயகம் என்றபெயரில் கபட நாடகம் தான் இருக்கிறது.

அமெரிக்காவில் நல்ல ஆசிரமத்தை உருவாக்கினேன். அமெரிக்கர்களால் அப்படிப்பட்ட ஒன்றை உருவாக்கமுடிய வில்லை.

அந்த தாழ்வு மனப்பான்மையால் எனது ஆசிரமத்தை அழிக்க முற்பட்டனர் என்று கூறினார் ரஜினீஷ்.

பின்னர் அங்கிருந்து டெல்லியிலுள்ள ஐந்து நட்சத்திர ஓட்டலில் தங்க புறப்பட்டார்,

இதற்காக விலை உயர்ந்த மெர்சிடெஸ்கார்வந்தது நடிகர் வினோத்கன்னா அந்த காரில் ரஜினீசை ஏற்றிக் கொண்டு ஓட்டலில் கொண்டுபோய் விட்டார்.

### பேட்டி

அங்கும் அவரை நிருபர்கள் பேட்டி கண்டனர்.

"இனி இந்தியாவை விட்டு போகவே மாட்டேன் இது எனது தாய் நாடு இது ஏழை நாடாக இருந்தாலும், ஒவ்வொருவன் அந்தரங்க உலகுக்கு இதுஓர் வளமான உலகு" என்றுவர்ணித்தார் ரஜினீஷ்

மேற்கு நாடுகள் சுத்த மோசம் தின்பது, குடிப்பது. களியாட்டம் ஆடுவ இதுதான் மேல் நாட்டுக்காரர்களின் பழக்கம் உல்லாச சல்லாபங்களிலும், படுக்கையிலும் காலம் கழிக்கிறார்கள் நம் நாடு சுய ஜீவஒளி காணும் பக்குவத்தைப் பெற்றது: புத்தர், மகாவீரர், நாகார்ஜுனா ஆகியோர் உதித்த இந்த புண்ணிய பூமியை மீண்டும் மிதித்ததில் பெருமகிழ்ச்சி அடைகிறேன் என்று உணர்ச்சி பொங்கக் கூறினார்.

### கொடுமைகளை விவரித்தார்

அமெரிக்க சிறையில் தனக்கு நடந்த கொடுமைகளை நெடுநேரம் விவரித்தார்.

ஜனநாயகம் என்றபேரில் உலகத்தையேமுட்டாளாக்க பார்க்கிறது அமெரிக்கா. அமெரிக்கராட்சததனத்தை அடக்க உலக நாடுகள் ஒன்று சேர வேண்டும் அவர்களை மன்னிக்கமாட்டேன். அமெரிக்கர்கள் மனிதர்களல்ல மனிதர்களை விட கீழ்த்தரமானவர்கள் என்று சாடினார் ரஜினீஷ்.

### குற்றம் புரியவில்லை

நான் எந்தக் குற்றமும் செய்யாதவன் என்றும் கூறுகிறார் இந்த 53 வயது ரஜினீஷ்.

ரஜினீஷ் சாமியார் வருகைக்காக டெல்லி விமான நிலையத்திற்கு வெளியே நடுங்கும் குளிரில் கித்தார் வைத்து பாடிக் கொண்டும் பிரார்த்தனை செய்து கொண்டும் இருந்த அவரது சீடர்கள் 500 பேரும் மகிழ்ச்சியுடன் கலைந்து சென்றனர்.

# பாதுகாப்பான இடத்திற்கு 6 ஆயிரம் பேர் அகற்றப் பட்டனர்

சென்னை, நவ. 17—புயல்-வெள்ளம் வந்தால் மக்களை வெளியேற்ற வசதியாக சென்னை ராஜரத்தினம மைதானத்தில் 50 பஸ்கள் தயார் நிலையில் வைக்கப்பட்டுள்ளன

கட்டுமரங்களும் வைக்கப்பட்டுளளன.

தாழ்வான பகுதியில் இருந்து சுமார் 6 ஆயிரம் பேர் பாதுகாப்பான இடங்களுக்கு அகற்றப்பட்டுள்ளனர்

எந்த நிலையையும் சமாளிக்க மாநகராட்சி ஊழியர்கள் போலீசார், மின்சார ஊழியர்கள் தயார்நிலையில் உள்ளனர்.

# தனி ஈழம் தவிர மாற்றுத் திட்டம் எதுவும் இல்லை விடுதலைபுலிகள் தகவல்

சென்னை, நவ. 17—தனி ஈழம் அமைவதுதவிர எங்களிடம் மாற்று திட்டம் எதுவும் இல்லை என்று இலங்கை தமிழர் விடுதலைஐக்கிய முன்னணி அறிவித்திருக்கிறது.

இலங்கைதமிழர்பிரச்சினை இன்னும் தீர்க்கப்படாமலே இருந்து வருகிறது.

இந்தியா தயாரித்துள்ள புதிய நகல் திட்டம் பற்றியும் இலங்கை அரசு ஆலோசனை நடத்தியது நகல் திட்டம் பற்றி இலங்கைதமிழர் விடுதலை இயக்கத்தினரும்விவாதித்தனர்

இலங்கை அரசு அளித்துள்ள திட்டம் பற்றியும் இந்திய அரசு விடுதலை இயக்கத்தினரை அழைத்து பேசியது

புதுடெல்லியில் வெளி விவகாரத் துறை செயலாளர் ரமேஷ் பண்டாரியுடனும் தமிழ் ஈழவிடுதலை இயக்கத்தினர் பேச்சுவார்த்தை நடத்தினார்கள்.

இந்தப் பேச்சுவார்த்தையில் எந்த விதமான முன்னேற்றமும் ஏற்படவில்லை

இலங்கை அரசு தன் சார்பில் கொடுத்துள்ள புதிய திட்டம்போல் தமிழ் ஈழ விடுதலை இயக்கத்தினரும் தங்களது திட்டத்தை அளிக்க வேண்டும் என்று கோரப் பட்டது.

விடுதலை இயக்கத்தினர் கொடுக்கும் திட்டவட்டக் கொள்கையின் அடிப்படையில் தான் இந்தியா மேற்கொண்டு நடவடிக்கை எடுக்க முடியும் என்றும் பேசப்பட்டது

இந்த நிலையில் தமிழ் விடுதலை இயக்க முன்னணி ஒரு அறிக்கையில் தெரிவிப்பதாவது:

இருதரப்பினருடன் இந்தியா எடுத்துக் கொண்ட சமரச பேச்சுவார்த்தையை இலங்கை அரசு சாதகமாக பயன்படுத்திக் கொண்டுவருகிறது.

சமரச பேச்சுவார்த்தை காலத்தை நீடித்துக் கொண்டே இலங்கை அரசு தமிழர்களை படுகொலை செய்து வருகிறது. வீடுகளை கொளுத்தியும், தமிழர்களை சுட்டுக கொன்றும் வெறியாட்டம் ஆடுகிறது.

போர் நிறுத்த ஒப்பந்தம் தொடங்கிய கடந்த ஜூன் மாதம் முதல் இதுவரை 800 தமிழர்கள் கொல்லப் பட்டுள்ளனர். தரைப்படையினரும், விமானப்படைமற்றும் கப்பற் படையினரும் அப்பாவித் தமிழர்களையும் பெண்கள், குழந்தைகள் அனைவரையும் பாரபட்சம் இல்லாமல் கொலை செய்து கொண்டிருக்கும் இந்த நேரத்தில் சமரசப் பேச்சு வார்த்தைககு எங்கே இடம் இருக்கிறது

எங்களைப் பொறுத்தவரை திட்டம் எங்கே என்று கேட்டால்எங்களின்திட்டம் தனிஈழம் அமைவது தான்.

மாற்றுத் திட்டம் ஒன்றும் இல்லை இந்ததிட்டம் பற்றி அண்மையில் புதுடெல்லியில் ரமேஷ் பண்டாரியிடமும் எடுத்துச் சொல்லியிருக்கிறோம்.

ஜெயவர்த்தனே இந்தியாவை ஏமாற்றப் பார்க்கிறார். அவரது திட்டம் தமிழர்களுக்கு ஏற்ற பயனைத் தராது. அவர திட்டத்தை பிரதமர் ராஜீவ் காந்தி நிராகரிக்கவேண்டும்

இவ்வாறு அந்த அறிக்கையில் அவர்கள் தெரிவித்துள்ளனர்.

விடுதலை இயக்க முன்னணியைச்சேர்ந்த வி. பாலகுமாரும் தங்களது இயக்கத்தின் திட்டத்தை நிருபர்களிடம் விளக்கினார்.

## ஐந்து லட்சம் உணவுப் பொட்டலங்கள்

சென்னை, நவ 17—சென்னையில் பெருமழை, வெள்ளப்பெருக்கால்பாதிக்கப்பட்ட மக்களுக்கு தமிழக நுகர்பொருள் வாணிபக்கழகம் 5 லட்சம்உணவுப்பொட்டலங்கள் வழங்கி இருக்கிறது.

தமிழக அரசு தலைமைச் செயலாளர் அந்தோணியின் உத்தரவின்பேரில் நுகர்பொருள் வாணிபக்கழகத் தலைவர்கே. ஏ. நம்பியார், இணை நிர்வாக இயக்குனர் கே. பொன்னுசாமி ஆகியோர் ஐந்து லட்சம் உணவுப் பொட்டலங்கள் தயாரிக்க ஏற்பாடு செய்தனர்.

சென்னை மாநகராட்சி தாலுகா அலுவலகங்கள் மூலமாக இந்த உணவுப் பொட்டலங்கள் வழங்கப் பட்டன.

மீண்டும் சென்னை நோக்கிப் புயலும் மழையும் வரும் என்று எதிர் பார்க்கப் படுவதால் ஏழை எளிய மக்கள் தங்குவதற்கு திருமண மண்டபங்கள் பள்ளிகள் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றன

அவர்களுக்கு உடனடியாக உணவு வழங்குவதற்கும் நுகர்பொருள் வாணிபகழகம் தயார் நிலையில் இருக்கிறது

## பிரதமர் ராஜீவ் ஓமன் புறப்பட்டார்

புதுடெல்லி, நவ 17—ஓமன் நாட்டில் நடைபெறும் தேசியதினவிழாவில் கலந்து கொள்ள பிரதமர் ராஜீவ்காந்தி இன்று புதுடெல்லியில் இருந்து விமானம் மூலம் புறப்பட்டு சென்றார்.

அரசு முறை பயணமாக அவர் ஓமன் நாட்டில் 2 நாட்கள் தங்கியிருப்பார்.

மத்திய வெளிவிவகாரத் துறை செயலாளர் ரமேஷ் பண்டாரி, மற்றும் அதிகாரிகள் அவருடன் சென்றுள்ளனர்.

## புரட்சித் தலைவரை ராமராவ் சந்தித்தார்

சென்னை, நவ. 17—ஆந்திர முதல்வர் என். டி. ராமராவ் இன்று முதல்வர் புரட்சித்தலைவரை சந்தித்துப் பேசினார்.

ஆந்திர முதல்வர் என், டி ராமராவ் இன்று காலை சென்னை வந்தார் அவர் முதல்வர் புரட்சித்தலைவரை சந்தித்துப்பேசினார்,

## ஜனதா வேட்பாளர் பட்டியல்

புதுடெல்லி, நவ. 17—அடுத்தமாதம் நடைபெறும் நாடாளுமன்ற இடைத் தேர்தல்களில் போட்டியிட ஜனதாக்கட்சி தனது வேட்பாளர்களை நிறுத்துகிறது. பீகாரில் கிசன்கஞ்ச் நாடாளுமன்றத் தொகுதியில் ஜனதா பொது செயலாளர் சையது சகபுதீன் போட்டியிடுகிறார்.

தெற்கு டெல்லியில் ஜஸ்வந்த்சிங் போட்டியிடுகிறார். ஒரிசாவில் கேந்திரபாரா தொகுதியில் சரத் குமார் நிறுத்தப்பட்டுள்ளார்.

அவசியம்

உடை மாறுவது முக்கியமல்ல; உள்ளம் மாறுவதும், உயர்ந்த கருத்துக்கள் உள்ளத்தில் பதிவதும்தான் அவசியம்.

—பேரறிஞர் அண்ணா

சிறப்பு

உள்ளதை பங்கிட்டு உண்பது, உழைப்பை பங்கிட்டு செய்வதுஎன்ற நிலையே சிறந்தது.

—தந்தை பெரியார்

## விவசாயத்தில் ஆர்வம்கொண்ட ஜப்பான் மக்கள்

டோக்கியோ, நவ. 17— ஜப்பான் விவசாயிகள் துணைத் தொழில்களில் ஈடுபடுவதை காட்டிலும், தங்களின் விவசாயபண்ணைகளில் இருந்து கொண்டே விவசாயத்தைக் கவனிப்பதிலேயே ஆர்வம் காட்டி வருகிறார்கள்.

ஆனால் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளவர்களில் 5 சதவிகிதத்திற்கு மேற்பட்டோர் 65 வயதைக் கடந்தவர்கள் ஆவார்கள்.

விவசாயிகள் வேறு தொழில்களில் ஈடுபடுவது குறைந்து வருகிறது. சமீபத்திய விவசாய ஆய்வில் இத்தகவல்கள் தெரிவிக்கப்பட்டுள்ளன.

# வெள்ள பகுதிகளில் காலரா தடுப்பு ஊசி: சென்னையில் தீவிரம்

சென்னை, நவ. 17— சென்னை நகரில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளில்தொத்துநோய் பரவாமல் தடுப்பதற்கு பொதுமக்கள் அனைவருக்கும் காலராநோய் தடுப்பு ஊசி போடும் வேலை தீவிரப் படுத்தப்பட்டுள்ளது. பலபகுதிகளில் மருத்துவ முகாம்கள் திறக்கப்பட்டுள்ளன. இது வரை 12 லட்சம் உணவுப் பொட்டலங்கள் வழங்கப்பட்டுள்ளன. பாதுகாப்பு நடவடிக்கை தொடர்ந்துமேற்கொள்ளப்பட்டு வருகிறது.

கடந்த 1வாரம் முழுவதும் சுமார் 10 நாட்களாக சென்னை நகரம் உள்பட தமிழகம் முழுவதும் அடைமழை பெய்தது.

### நிவாரணப் பணிகள்

சென்னை நகரில் தாழ்வான பகுதிகளில் வெள்ளம் புகுந்தது. பல குடிசைகள் நீரில் மூழ்கின. கோட்டூர்புரம், கே.கே.நகர் போன்ற பகுதிகளில் பலமாடிக் கட்டிடங்களிலும் வெள்ளம் புகுந்ததால் மக்கள் பாதிக்கப்பட்டனர்.

தரைப்பகுதி கட்டிட குடியிருப்புகளில் வெள்ளம் புகுந்ததால் மக்கள் வேறு இடத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டு தங்குவதற்கான வசதிகளும் செய்து தரப்பட்டன.

சென்னை நகர மாநகராட்சி தனி அதிகாரி மாதவ சர்மா, கமிஷனர் சாந்த ஷீலா நாயர் மற்றும் அதிகாரிகள் நிவாரணப் பணிகளில் உடனடியாக ஈடுபட்டனர்.

பாதிக்கப்பட்ட மக்களுக்கு இருப்பிடம் உண்ண உணவு மற்றும் பாதுகாப்பு நடவடிக்கைகளையும் அவர்கள் மேற்கொண்டனர்.

சென்னை நகரப் போலீசாரும் தீயணைப்புப் படையினரும் நிவாரணப் பணிகளில் ஈடுபட்டனர்.

நிவாரணப் பணிகள் குறித்து நேற்று சென்னை மாநகராட்சி தனி அதிகாரி மாதவ சர்மா நிருபர்களிடம் விளக்கினார்.

அவர்கூறியதாவது:—

வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் காலரா போன்ற தொத்து நோய்கள் பரவாமல் தடுப்பதற்கு சுகாதாரத்துறை அதிகாரிகள் தீவிர நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறார்கள்.

### சிகிச்சை

நிவாரண முகாம்களில் தங்கியிருக்கும் சுமார் ஒரு லட்சத்து 50 ஆயிரம் பேருக்கு இதுவரை காலரா தடுப்பு ஊசி போடப்பட்டுள்ளது.

இந்த முகாம்களில்மருந்து நிலையங்களும் ஏற்படுத்தப்பட்டு பொது மக்களுக்கு சிகிச்சை அளிக்கப்பட்டு வருகிறது.

இதுவரை 12 லட்சம் உணவுப் பொட்டலங்கள் வழங்கப்பட்டுள்ளன. இன்றும் 2 லட்சம் உணவுப் பொட்டலங்கள் வழங்கப்படுகிறது.

வெள்ளம் வடிந்து விட்டதும் சில பகுதிகளில் உள்ள வீடுகள் குடியிருப்பதற்கு சரிபடவில்லை. சுவர், சேர் மண் குவிந்து கிடக்கிறது. இவை அகற்றப்பட்டால் தான் மக்கள் தங்க முடியும்.

ஆகவே மண்ணை அகற்றும் வேலையும் ஒருபுறம் நடக்கிறது. பாதிக்கப்பட்ட மக்கள் தொடர்ந்துதிருமண மண்டபங்களில் பாதுகாப்பாக தங்க வேண்டியிருக்கிறது.

இவ்வாறு மாதவ சர்மா கூறினார்.

### பம்புகள் மூலம் வெளியேற்றம்

செம்பியம், பெரம்பூர், புளியந்தோப்பு முதலிய பகுதிகளில் தேங்கியிருந்த வெள்ளம் வடிக்கப்பட்டு வருவதாக கமிஷனர் சாந்த ஷீலா நாயர் கூறினார்.

சுரங்கப் பாதைகளில் தேங்கியிருக்கும் நீரையும் மோட்டார் பம்பு செட்டுகள் மூலம் அகற்றும் வேலை தொடர்ந்து நடந்து வருவதாகவும் அவர் தெரிவித்தார்.

## ரஜினீஷின் கார்கள் ஏலம்

ஓரிகன், நவ 17— அமெரிக்காவை விட்டு கிளம்பிய ரஜினீஷ் சாமியார் இந்தியாவிற்கு வந்து கொண்டிருப்பது தெரிந்ததே. அமெரிக்காவில்ஓரிகானில் ரஜினீஷ் வைத்திருந்த ஆசிரம உடமைகளை ஏலம் விட முடிவு செய்யப்பட்டுள்ளது.

விலையுயர்ந்த 93ரோல்ஸ் ராய்ஸ் கார்களும் மற்றும் ஏராளமான பொருட்களும் ஏலம் விடப்படும் என ஆசிரம பொறுப்பாளர் சுவாமி தயான் ஜான் கூறினார்.



# கருணாநிதியின் 7 ஆண்டு ஆட்சியில் ஆரம்ப ஆசிரியர்கள் பட்டபாடு... [2]

அந்தோ ஆசிரியர்கள் என்று தலைப்பிட்டு ஆசிரியச் சமுதாயத்திற்கு—இன்று அவர்களின் போராட்டத்திற்கு ஆதரவாக உணர்ச்சிகள் பொங்க எழுதியுள்ளவர்.

1969 முதல் 1976 வரை முதலமைச்சராக இருந்த போது ஆசிரியர்கள் என்ன பாடுபடுத்தப்பட்டார்கள் என்பதை நினைத்துப் பார்க்கும் போது நெஞ்சம் வேதனையால் விம்முகிறது.

1969 ஆகஸ்டில் அண்ணா சமாதியில் மலர் வளையம் வைத்துவிட்டு கோரிக்கை கொடுக்க கோட்டை வந்த ஆசிரியர்களை காவலர்களை விட்டு லத்திச் சார்ஜ் செய்ததையும் - அவர்களின் பிரதிநிதிகள் சந்திக்கச் சென்றபோது உட்காருங்கள் என்றுகூட சொல்லாமல் அலட்சியமாகப் பேசி விட்டுப் போனதாலும்வரலாற்றில் ஆசிரியர்கள்முதல் முதலாக மூன்று கட்டப் போராட்டத்தை அறிவித்தார்கள்.

### மாநாட்டில் பரபரப்பு

1969 ல் ஆசிரியர்களிடம் பேசும் போது போராட்டம் —மிதிவண்டி பேரணி என்றால் கோரிக்கைகள்குப்பை கூடைக்குபோய்விடும்என்று மிரட்டியதை ஆசிரியர்கள் எதிர்த்து ஆயிரக்கணக்கில் மிதிவண்டிகளில் அணி வகுத்து சென்னை வந்தனர். கையில் காசு இல்லாதவர்கள் சென்னையை பார்க்க சைக்கிளில் வருகிறார்கள் என்று இகழ்ச்சியாக பேசியதால் மாநாட்டில் பெரும்பரபரப்பு ஏற்பட்டது. கோரிக்கைகளை நீட்டிய ஆசிரியர்களின் கரங்களை அரசு ஊழியக் கட்டிடத் திறப்பு விழாவில் கோரிக்கை என்று காரக்கையை நீட்டுகிறார்கள் என்று வர்ணித்து அன்று பேசியவர் கருணாநிதி.

1970ல் மதுரையில் தேர்தலுக்கு முன் நடை பெற்ற ஆசிரியர் மாநாட்டில்தொலை பேசி மூலம் கலந்து கொண்ட பட்டம் பேசி "இரா முண்ணி மாளிகை"கட்ட அடிநிலமும் 3லட்ச ரூபாய் நிதியும் வழங்குவதாக அறிவித்து விட்டு தேர்தல் முடிந்த பின் 1976 வரை அளித்த வாக்குறுதியை நிறைவேற்றாத ஆட்சி தான் கருணாநிதி ஆட்சி. 1972ல் அறிவிக்கப்பட்டப்போராட்டத்தில் உதவாக்கரை கல்விச்சட்டங்களை எரிக்க வேண்டுமென்ற முடிவை கேட்டு ஆசிரியர்களிடம் "சட்டங்களை எரித்தால் ஜெயிலுக்குப்போக வேண்டும் தெரியுமா?" என்று மிரட்டியவா இன்று அரசு ஆணைகளை ஆசிரியர்கள் கல்விஅறிவுபுகட்டும்ஆசிரியர்கள் அன்று கரங்களில் சிறுநீர் சட்டிகளை ஏந்த வைத்தபெருமைகருணாநிதி ஆட்சியைச் சேரும்.

### கருணாநிதி இட்ட கோர ஆணை

ஆசிரியர்கள் போராட்டத்தை அரசு தனது இரும்புக் கரம் கொண்டு அடக்கும் என்று இறுமாப்பு பேசியவர் கருணாநிதி.

சோளக்களியும்கோதுமை கூழும் சாப்பிட தந்தார்கள் செல்லும் சிறைச்சாலைப் பேணும் ஊர்கின்ற கூடங்களில் ஆசிரியர்கள் பலரை ஆடுமாடுகளை தொழுவத்தில் ஓட்டி அடைப்பதைப் போல் அடைத்தது கருணாநிதி ஆட்சி.

இந்த சிரமங்களை வந்து பார்த்தவர்கள் சொன்ன போது சிறை என்றால் மாமியார் வீடு போலவா இருக்கும் என்று எழுதியவர் கருணாநிதி.

அன்று ஆசிரியர்கள்போராடும் போது ஆசிரியர்களைப் பார்த்து "போராடாத ஆசிரியர்களை பாராட்டுகிறேன்"என்று பகிரங்க அறிக்கை விட்டவர் தான் கருணாநிதி.

வாடகை செலுத்தி தங்கியிருந்த சட்டமன்ற உறுப்பினர் அறையை அரசு மேல் பூட்டுப் போட்டு ஆசிரியர்களை தெருவில் நிறுத்தியது கருணாநிதி அரசு.

### கருங்காலிக் கூட்டம்

"சட்டங்களை எரிப்பது ஆசிரியர்களின் செயலா? கம்யூனிஸ்ட் பாணியில் மறியல் நடத்துவோர் என்ன ஆசிரியர்களா? என்றெல்லாம் அன்று கத்துவங்களைப்பேசி எழுதியவர் ஆசிரியர்போராட்டங்களை முறியடிக்க அந்தச்சங்கத்தின் ஒரு மாவட்டச் செயலாளரான க. மீனாட்சி சுந்தரத்தை கையில் வைத்துக்கொண்டு தனது கட்சி ஆசிரியர்களுக்கு அழைப்பு விடுத்து ஒரு கருங்காலிக் கூட்டத்தையும் அவர் பின்னால் ஒரு காக்காய் கூட்டத்தையும் வரலாற்றில் ஏற்படுத்தி ஒரு முன்னுதாரணத்தை ஏற்படுத்தியவர் கருணாநிதி.

### அன்றும் இன்றும்

"நாங்கள்போராடமாட்டோம்" — வாதாடி பெறுவோம்" கோரிக்கை திருவதில் ஒரு கனிவு — பணிவு வேண்டும் என்று அந்தக் கருங்காலி கூட்டத்தை பேசவைத்தவர் இன்று ஆசிரியர்கட்குபரிந்துபேசும் கருணாநிதி தான்.

அரசே முன்னின்று, திருவண்ணாமலையில் போராடிய இயக்கத்திற்கு எதிராக "ஆசிரியர் மன்றம்" என்ற அமைப்பு ஒன்றை ஏற்படுத்தி அதில் சேர்ந்தவர்களையெல்லாம் அரசின் செல்லபிள்ளைகளாக அன்று அரசு தரப்பில் கருணாநிதி நடத்தவில்லையா? இவர்களின் திருவிளையாடல்களால் எத்தனை ஆசிரியர்கள் யூனியன் விட்டுயூனியன் மாற்றப்பட்டனர். எத்தனை கொடுமைகளுக்கு ஆளாக்கப்பட்டனர். விவசாயிகள் போராட்டத்தில்சம்பந்தப்படுத்தி அமைப்புகளின் தலைவர்களை சிறைகளில் அடைத்து மகிழ்ந்தவர் கருணாநிதி. போராடிய ஆசிரியர்களை கம்யூனிஸ்ட் கட்சியின் கைக்கூலிகள் என்று அன்று ஆட்சிப் பொறுப்பிலிருந்த போது சொல்லி விமர்சித்த தன்னை எதிர்த்து போராடிய ஆசிரியர்களை கைக்கூலிகள் என பட்டம் சூட்டிவிட்டு எதிர்கட்சியான போது இவரது கட்சிக்கட்டளைக்கு ஏற்ப அரசை எதிர்த்துப் போராட வரவில்லையெனில் கருங்காலி என்ற தத்துவத்தின் கண்டுபிடிப்பு கர்த்தாவாக கருணாநிதி தவிர வேறு யார் இருக்க முடியும்?

—: ஆரம்ப ஆசிரியர்:—

### எரிமலை வெடிப்பு: வேண்டுகோள்

ஐ. நா., நவ. 17— தென் அமெரிக்காவிலுள்ள கொலம்பியா நாட்டில் எரிமலை ஒன்று பயங்கரமாக வெடித்ததால் சுமார் 25 ஆயிரம் பேர்உயிரிழந்தனர்.

நிவாரணப் பணிகளுக்கு தாராளமான நிதி உதவி அளிக்கும்படி உலக நாடுகளை ஐக்கிய நாடுகள் சபை உருக்கத்துடன் கேட்டுக்கொண்டிருக்கிறது

### உக்கம்சந்த் வேட்டி-சேலை வழங்கினார்

சென்னை, நவ—17- மதுராந்தகம் பகுதியில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்கள் அங்குள்ள ஜெயின்கல்யாண மண்டபத்தில் குடியமர்த்தப்பட்டுள்ளனர்.

தமிழ்நாடு குடிநீர்வடிகால் வாரியத் தலைவர் உக்கம் சந்த் தமது சொந்த செலவில் அவர்களுக்கு உணவும், வேட்டி சேலையும் வழங்கினார். சுமார் 5 ஆயிரம் பேருக்கு 4 நாள் உணவு வழங்கப்பட்டது.

### திருட்டு: ஆசாமி கைது

சென்னை, நவ. 17— சென்னை ஐஸ் அவுஸ் பகுதியில் அதிகாலையில் கோலம் போடச் சென்ற வள்ளியம்மாள் என்பவரின் தங்கசங்கிலியை ஒரு ஆசாமி பறித்துக் கொண்டு ஓடினார். அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் அவனை துரத்திப் பிடித்து போலீசில் ஒப்படைத்தனர். கைதானவன் பெயர் ரஞ்சன் வயது 29.

# சீக்கியர் விடுதலை பற்றி மத்திய மந்திரியுடன் பஞ்சாப்முதல்வர் மோதல்

புதுடெல்லி, நவ. 17— பஞ்சாபில் ஏற்கனவே கைதாகியுள்ள சீக்கிய தீவிரவாதிகளை விடுதலை செய்வது சம்பந்தமாக மத்திய அமைச்சருக்கும் பஞ்சாப் முதல்வர் பர்னாலாவுக்கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டுள்ளது.

பஞ்சாபில் முன்பு வன்முறை ஏற்பட்டதைத் தொடர்ந்து ஏராளமான சீக்கிய பயங்கரவாதிகள் கைது செய்யப்பட்டதும், அகாலி தளக் கட்சி ஆட்சிக்குவந்த பின் கைதானவர்களில் பலர் விடுதலை செய்யப்பட்டதும் தெரிந்ததே.

அவ்வாறு பயங்கரவாதிகளை விடுதலைசெய்ததை மத்திய உள்துறை இலாகா கடுமையாக ஆட்சேபித்துள்ளது.

பஞ்சாப்முதல்வர் சுர்ஜித் சிங் பர்னாலா, மத்திய உள்துறை பாதுகாப்பு ராஜாங்க அமைச்சர் அருண் நேருவை சந்தித்தார்.

டெல்லியில்காவலில்வைக்கப்பட்டுள்ள 200 சீக்கியர்களையும் விடுதலை செய்ய வேண்டும் என்று அப்போது பர்னாலா கேட்டுக் கொண்டார்.

வெடிகுண்டு வீசியது வன்முறையில் ஈடுபட்டது போன்ற பல்வேறு குற்றச்சாட்டுக்களின் பேரில் அவர்கள் காவலில் வைக்கப்பட்டுள்ளனர். அவர்களை விடுவிக்க வேண்டும் என்று பர்னாலா வலியுறுத்தினார்.

ஆனால் அவர்களை விடுதலைசெய்யமுடியாதுஎன்று அருண்நேரு மறுத்து விட்டார்.

அவர்கள் மீது நீதிமன்றத்தில் வழக்கு உள்ளது. இந்த நிலையில் அரசு அதில் தலையிட முடியாது என்று அருண்நேரு கூறினார்.

அது மட்டுமின்றி பஞ்சாபில் கைதானவர்களை பர்னாலா அரசு விடுதலை செய்ததையும் அப்போது சுட்டிக்காட்டி அந்த செயலுக்கு ஆட்சேபணை தெரிவித்தார் அருண்நேரு.

விடுதலை செய்யப்பட்ட தீவிரவாதிகளில் சிலர் மீண்டும் எல்லை தாண்டி பாகிஸ்தானுக்கு சென்று வன்முறை பயிற்சி பெற்று வருவார்கள் என்றும் அருண் நேரு கூறினார்.

### மாநில விவகாரம்

சட்டம் ஒழுங்கு என்பது மாநில சம்பந்தப்பட்ட விவகாரம் அவர்கள் வன்முறையில் ஈடுபட்டால் அதன்படி நடவடிக்கை எடுக்கப்படும் என்று பர்னாலா பதிலளித்தார்.

### மேட்டூர் மில்ஸ்: ராகவானந்தத்திடம் கோரிக்கை

சென்னை, நவ. 17— மேட்டூர் டெக்ஸ் டைல்ஸ் மில் கடந்த 4 மாத காலமாக மூடிக் கிடக்கிறது. இதில் 2500 தொழிலாளர்கள் பணியாற்றி வருகின்றனர். மேட்டூர்மில்லை திறக்க துணைலேபர் கமிஷனர் மத்தியில் நடந்த பேச்சு வார்த்தைகள்பயனளிக்கவில்லை அந்த மில்லைச் சேர்ந்த அனைத்து சங்க கமிட்டியின் சார்பில் பிரதிநிதிகள் என். சண்முகம் (கழகம்) கே.எஸ் முத்துசாமி ஏ ஐ டி யு சி எல் ஜானகிராமன் (ஐ என் டி யு சி) கே சி பாண்டியன் (தி மு க) ஆகியோர் கழகப் பொதுச் செயலாளர் எஸ் இராகவானந்தம் பேரவை செயலாளர் வை. பெருமாள் ஆகியோரை சந்தித்து மில்லை திறக்க சம்பந்தப் பட்டவர்களிடம் கூறுமாறு கோரிக்கை விடுத்தனர்

# வெள்ளத்தால்116பள்ளிக் கட்டிடங்களுக்கு சேதம்

தஞ்சாவூர், நவ. 17— மழை வெள்ளத்தால் தஞ்சை மாவட்டத்தில் 116 பள்ளிக்கட்டிடங்கள் சேதமுற்றன என்று மாவட்ட கலெக்டர் டி.ஆர். ராமசாமி கூறினார்.

கலெக்டர் ராமசாமி நிருபர்களிடம் கூறியதாவது:—

கிழக்குத் தஞ்சை மாவட்டம் வெள்ளத்தால் பெரிதும் பாதிக்கப்பட்டது.

அரசின் தீவிர நிவாரணப் பணிகளால் தற்போது சகஜ நிலை திரும்பி வருகிறது.

[illegible] வெள்ளத்தால் [illegible] வெள்ள நிவாரணப்பணிகளை மேற்கொள்ள 5 கோடியே 67 லட்சம்ரூபாய் தேவைப்படுகிறது.

திருத்துறைப்பூண்டி, வேதாரண்யம், மன்னார்குடி, நாகப்பட்டினம், திருவாரூர் ஆகிய தாலுகாக்கள் பெரிதும் பாதிக்கப்பட்டன.

### கால்வாய்களில் உடைப்பு

கால்வாய்களில் 45உடைப்புகள் ஏற்பட்டு 28 ரோடுகளில் பெரிய உடைப்பு ஏற்பட்டது. 116 பள்ளி கட்டிடங்கள், 2அரசு கட்டிடங்கள் 11 ஆஸ்பத்திரிகள் ஆகியவை வெள்ளத்தால் பாதிக்கப்பட்டன.

இவ்வாறு கலெக்டர் கூறினார்.

தஞ்சை மாவட்ட வெள்ள நிவாரண கமிட்டி கூட்டம் கலெக்டர் தலைமையில் நடந்தது. வெள்ளத்தால் 506 கிராமங்களைச்சேர்ந்த 51,310 பேர் பாதுகாப்பான இடங்களில் குடியமர்த்தப்பட்டனர். தற்போது நிலைமை சீர்பட்டதால் அவர்கள் தங்கள் இல்லங்களுக்குத் திரும்புகிறார்கள். குறுவை அறுவடை தீவிரமாக நடைபெறுகிறது. அரசு நெல் கொள்முதல் நிலையங்களுக்கு நெல்வரத்து தொடங்கி விட்டது.





Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D M K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS-600029.

## மீண்டும் புயல் அபாயம்: முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை தீவிரமாக மேற்கொள்ள

# புரட்சித்தலைவர் உத்தரவு

சென்னை, நவ. 17. வங்கக்கடலில் மீண்டும் புயல் உருவாகியுள்ளதால் தகுந்த முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை எடுக்குமாறு முதல்வர் புரட்சித் தலைவர் மாவட்டக் கலெக்டர்களுக்கு உத்தரவிட்டுள்ளார்.

வங்கக்கடலில் மீண்டும் உருவாகியுள்ள புயல் இன்று காலை சென்னைக்கு கிழக்கே 275 கிலோமீட்டர் தூரத்தில் மையம் கொண்டிருந்தது.

இப்புயல் சின்னம், வடமேற்காக நகர்ந்து வருகிறது.

இப்புயல் சின்னம் மேலும் வலுப்பெற்று இன்று இரவு சென்னைக்கும் நெல்லூருக்கும் இடையே கரையைக் கடக்கலாம் என வானிலை ஆய்வு நிலையம் அறிவித்துள்ளது.

இதன் விளைவாக தமிழகத்தின் வட கடலோர மாவட்டங்களிலும் சென்னை நகரிலும் பலத்த மழை பெய்யக்கூடும். மணிக்கு 60 கிலோ மீட்டர் வேகத்தில் புயல் வீசக்கூடும் எனவும் வானிலை ஆராய்ச்சி நிலையம் அறிவித்துள்ளது.

### முதல்வர் உத்தரவு

இதையொட்டி மீண்டும் ஏற்பட்டுள்ள புயல்-வெள்ள அபாயங்களை சமாளிக்க தமிழக அரசு எல்லாவித முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளையும் எடுத்துள்ளது.

புயல் மற்றும் பலத்தமழை பெய்யக்கூடும் என அறிவிக்கப்பட்டுள்ளதால், "எல்லாவிதமான முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளையும் எடுக்குமாறு" மாவட்டக் கலெக்டர்களுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் உத்தரவிட்டுள்ளார்.

### அந்தோணி பேட்டி

அரசு தலைமைச் செயலாளர் டி. வி. அந்தோணி நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:-

வங்கக்கடலில் உருவாகியுள்ள புயல் சின்னத்தின் விளைவாக, சென்னை, செங்கற்பட்டு, தென்னாற்காடு, தஞ்சாவூர் மாவட்டங்களில் பலத்த மழை பெய்யக்கூடும் என அறிவிக்கப்பட்டுள்ளது.

எனவே மேற்கண்ட பகுதிகளில் தாழ்வான பகுதிகளில் வசிப்பவர்கள் உடனடியாக பாதுகாப்பான இடங்களுக்கு சென்றுவிடுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளனர்.

சென்னையில் தொடர்ந்து மாநகராட்சிப் பள்ளிகள் தாழ்வான பகுதிகளில் இருந்து வருவோர் தங்க திறந்து வைக்கப்பட்டிருக்கும்.

கோட்டூர்புரம், வேளச்சேரி வியாசர்பாடி, செம்பியம், பெரம்பூர், விருகம்பாக்கம், அரும்பாக்கம், பாடி, கே.கே. நகர், தரமணி, திருவான்மியூர் ஆகிய பகுதிகளில் தாழ்வான இடங்களில் உள்ளோர் பாதுகாப்பான இடங்களுக்குச் செல்லுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளனர்.

இவ்வாறு டி. வி. அந்தோணி கூறினார்.

### மத்தியகுழு

இதற்கிடையில் இதுவரை வெள்ளத்தால் ஏற்பட்டுள்ள சேதங்களைப் பற்றி மதிப்பிட மத்திய குழு 20 அல்லது 21ந் தேதி சென்னைக்கு வந்து சேரும் என எதிர்பார்க்கப்படுகிறது.

## வெள்ளம் பாதித்த இடங்களை அமைச்சர் கோவேந்தன் சுற்றிப் பார்த்தார்

சென்னை, நவ. 17- திருவொற்றியூரை அடுத்த திருச்சினாங்குப்பம் புயல் பாதுகாப்பு இல்லத்தில் தங்கியிருந்த மீனவர்களை சந்தித்து நிவாரணப் பணிகளைப் பற்றிகேட்டார். அங்கிருந்த தாய்மார்களை அமைச்சர் கோவேந்தன் அணுகிய போது தங்களுக்கு உணவு பொட்டலங்கள் வழங்கப்பட்டதாகவும் தெரிவித்தனர்.

பின்னர் கடலரிப்பால் பாதிக்கப்பட்ட பகுதிகளை நேரில் சென்று பார்வையிட்டார். எண்ணூர்—மணலி செல்லும் சாலையில் கடல் நுழைந்து சேதம் விளைவித்திருக்கிறது. கடல் அலைகள் சாலை வரை வந்து மோதிக் கொண்டு இருக்கின்றன. காசி விசுவநாதர் ஆலயத்தின் சுவரை கடலலைகள் தொட்டுச் செல்கின்றன. திருச்சினாங்குப்பத்திலிருந்து பாரதிநகர் வரை சுமார் 3 கி.மீ. தூரம் கடலரிப்பால் பாதிக்கப்பட்டுள்ளன.

பாதிக்கப்பட்ட மக்களுக்கு அமைச்சர் கோவேந்தன் ஆறுதல் கூறினார்.

### பாலம் மூடல்

சென்னை சூளைமேட்டில் கூவம் ஆற்றின் குறுக்கே உள்ள தாம்பாதி பழையால் சேதமடைந்துள்ளது. எனவே அங்கு போக்குவரத்து தடை செய்யப்பட்டுள்ளது.

## செம்பரம்பாக்கம் ஏரி திறப்பு

முன் எச்சரிக்கை நடவடிக்கையாக செம்பரம்பாக்கம் ஏரி தண்ணீர் திறந்துவிடப்பட்டது. சனிக்கிழமை மாலை 5 மணியில் இருந்தே வினாடிக்கு 5 ஆயிரம் கன அடி தண்ணீர் திறந்துவிடப்பட்டது. இதனால் அடையாறு ஆற்றில் ஒரு அடி தண்ணீர் உயரும். அதே போல் சனிக்கிழமை இரவு வினாடிக்கு 10 ஆயிரம் கன அடி தண்ணீர் திறந்து விடப்பட்டது. இதனால் அடையாற்றில் தண்ணீர் அளவு இரண்டு அடி உயர்ந்து இருக்கும்.

இதைப் பார்த்து பொது மக்கள் பயப்படத் தேவையில்லை. கோட்டூர்புரத்தில் இருப்பவர்கள் இதனால் பயப்பட வேண்டாம்.

சென்னை அடையாறு திரு.வி.க.பாலத்தில் வடக்கு முனையில் வெள்ளத்தின் சூழல் காரணமாக மணல் பகுதியால் இணைக்கப்பட்ட இடத்தில் தான் அரிப்பு ஏற்பட்டது.

கான்கிரீட் பகுதிகளில் சேதம் ஏற்படவில்லை. உடைப்பை அடைக்கும் வேலை தீவிரமாக நடந்து வருகிறது. 24 மணி நேரத்தில் அது முடிந்துவிடும்.

## அராபத் இந்தியா வருகிறார்

புதுடெல்லி, நவ. 17- பாலஸ்தீன விடுதலை இயக்கத்தலைவர் யாசர் அராபத் நவம்பர் 18ந் தேதி புதுடெல்லி வருகிறார். இங்கு அவர் 3 நாள் சுற்றுப் பயணம் செய்வார். பிரதமர் ராஜீவை அவர் சந்தித்துப் பேசுவார்.

## சமூகநல நிறுவனம் வழங்கிய 3000 உணவு பொட்டலம்

சென்னை நவ. 17— பெரம்பூர், அருந்ததியார் நகர், ஓட்டேரி, ஐயனாவரம் பகுதிகளில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு "கம்யூனிடி சர்வீஸ் கில்டு" என்னும் சமூக நல நிறுவனம் 3000 உணவுப் பொட்டலங்கள் வழங்கியது.

மேலும், சைதாப்பேட்டை ஜோதியம்மாள் நகர், பெரம்பூர் அருந்ததியார் நகர் பகுதிகளில் வசித்து வரும் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட 1500 குடும்பங்களுக்கு "கேத்தலிக் ரிலீப் சர்வீஸஸ்" என்ற நிறுவனத்தின் உதவியுடன் 10 நாட்களுக்குதொடர்ந்து உணவு வழங்குவதாக அந்த நிறுவனத்தின் இயக்குநர் ஆர். வெங்கடாசலம் தெரிவித்தார்.

## உச்ச நீதிமன்ற தீர்ப்பு: முஸ்லிம்கள் எதிர்ப்பு

அலகாபாத். நவ. 17 — ஒரு முஸ்லிம் எத்தனை பெண்களையும் மணந்து கொள்ளலாம் என்ற முஸ்லிம்சட்டத்தைஎதிர்த்து முஸ்லிம் பெண் ஷாபானு வழக்கு தொடர்ந்தார். அப்படிப்பட்ட சட்டம் செல்லாது என்று உச்ச நீதிமன்றம் தீர்ப்பளித்தது. அந்த தீர்ப்பு முஸ்லிம்களுக்கான சட்டத்தில் (கானூன்ஷரியத்) தலையிடுவதாக உள்ளது என்று முஸ்லீம் சட்ட வாரியம் கூறி உள்ளது. அலகாபாத்துக்கு பிரதமர் ராஜீவ் நவம்பர் 19 ந் தேதி வரும் போது அன்று அலகாபாத்தில் கடை அடைப்பு நடத்தவும் முடிவு எடுத்தனர்.

## தலைமைக் கழக அறிவிப்பு

தலைமைக் கழக அறிக்கை எண் 110.85

### கழகத் தோழர்களுக்கு அறிவிப்பு

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்ற கழகத்திலிருந்து விலகி இருந்த கீழ் கண்டவர்கள் மீண்டும் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தில் இன்று இதய தெய்வம் மாண்புமிகு

**தமிழக முதல்வர் புரட்சித்தலைவர்**

அவர்கள் முன்னிலையில் சேர்ந்தனர்.

1 திரு பி. எஸ். கந்தசாமி (முன்னாள் எம். எல். ஏ.)
2 திரு பி. கே. ஆனந்தகுமார் (கோவை)
3 திரு கே. சங்கர் (திருச்சி)
4 திரு ஆர். தங்கவேல் (தாந்தோணி)
5 திரு பி. மாரிமுத்து (கரூர்)
6 திரு எஸ். துரைசாமி (தாந்தோணி)
7 திரு பூவை. கி. ரத்தினம் (பரமத்தி)
8 திரு டி. ஆர். கிருஷ்ணசாமி
9 திரு டாக்டர் பெரியசாமி
10 திரு பன்னீர்செல்வம் (பரமத்தி)
11 திரு வேலுசாமி (ஆதிரெட்டி பாளையம்)
12 திரு கே. எம். நல்லுசாமி
13 திரு சுப்பராயன்
14 திரு செல்வம்
15 திரு வி. ராஜன்
16 திரு பி. ராமசாமி
17 திரு எஸ். தங்கராசு
18 திரு ஆர். சண்முகம்
19 திரு என். சண்முகம்
20 திரு எம். பழனிசாமி

அப்போது கழக பொதுச் செயலாளர் திருமிகு எஸ். இராகவானந்தம் அவர்களும் நாடாளுமன்ற கழக தலைவர் திரு பா. குழந்தைவேலு எம். பி. திரு ஜி. வரதராஜு எம். பி. திரு. ஏ. சி. சண்முகம் எம். பி. ஆகியோர் உடனிருந்தனர்.

இவ்வறிவிப்பு இதய தெய்வம் மாண்புமிகு முதல்வர் புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடன் வெளியிடப்படுகிறது.

**எஸ். இராகவானந்தம்**
பொதுச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை—14
17-11-85

## ஆர் ஈ சந்திரசேகரின் வசந்த கீதங்கள்

ஏ. . நிறுவன "வசந்த கீதங்கள்" எனும் கேசட்டை வெளியிடுகிறது.

இலங்கை இசையமைப்பாளர் ஷான் இசையில் ஆர். ஈ. சந்திரசேகர் எழுதிய "வளரும் நிலாவே உனது முகம்" "நாடு வில்கள் கண்ணிலே" ஆகிய பாடல்கள் ஏ. வி. எம். ஆர். ஆர். தியேட்டரில் ஒளிப்பதிவாயின. பாடல்கள் எஸ். பி. பாலசுப்பிரமணியமும், ஷைலஜாவும் பாடினார்கள்.

இலங்கை இசையமைப்பாளர் ஷான் 'இளைய நிலா' உட்பட பலபடங்களுக்கும் இசையமைத்தவர். ஆர். ஈ. சந்திரசேகர் எழுதிய பாடல்கள் அடங்கிய கேசட்டை ஏவி-எம். இம்மாதம் வெளியிடுகிறது.

# கலை விருந்து

## கண்ணிலே சுகம் தேடும் வெண்ணிலா முகம்

கலைஞானம் வழங்கும் பைரவி என்டர்பிரைசஸ் ஜோதிமலர் படத்தில் பாண்டியன்- ஜீவிதா இணைந்து நடிக்கிறார்கள்.

இப்படத்தில் ஜெய்சங்கர் கே. ஆர். விஜயா ஜோடியின் புதல்வர்களாக சுரேஷ், கங்கா, பாண்டியன் ஆகியோர் நடிக்கிறார்கள்.

இவர்களது காதலிகளாக முறையே சந்தியா, ஸ்ரீஜெயா, ஜீவிதா ஆகியோர் நடிக்கிறார்கள்.

போலீஸ் அதிகாரியாக கராத்தே மணி நடிக்கும் இப்படத்தில் மற்றும் வி. கே. ராமசாமி சங்கிலி முருகன் ஆகியோர் நடிக்கிறார்கள்.

இப்படத்தின் படப்பிடிப்பு அக்டோபர் 23ம் தேதி டைரக்டர் கோபிநாத்தின் இல்லத்தில் துவங்கியது.

இதைத் தவிர, கங்கா ஸ்ரீஜெயா பங்கு கொண்ட கனவு பாடற்காட்சி இந்திராலயம் ஸ்டுடியோவில் படமாக்கப்பட்டது.

இதற்கான பாடலை கலைஞானம் எழுத, ஜேசுதாஸ், வாணிஜெயராம் பாட, சங்கர்கணேஷ் இசையமைத்துள்ளனர். நடனக் காட்சயை சுந்தரம் அமைத்தார்.

கதை, திரைக்கதை ஆகியவற்றை கலைஞானம் எழுத என். கே. விஸ்வநாதன் ஒளிப்பதிவு செய்ய, வசனம், டைரக்ஷன் பொறுப்புகளை இராம. நாராயணன் ஏற்றுள்ளார்.

இப்படத்தை என். சுப்பையா, டி. என். வெங்கட்ராமன் ஆகியோர் கூட்டாக தயாரிக்கின்றனர்.



★★ ராஜிவ்-கீதா
படம்: நினைவுகள் மறைவதில்லை

★★ ஜெயமாலா
படம்: மீண்டும் நீ

## ரஜினிகாந்திடம் சத்யராஜ் ஏமாற்றம்

பிரபல காண்டிரக்டர் கோபிநாத். அவருக்குச் சொந்தமான இடத்தை போக்கிரிகள் சிலர் சாராய வியாபாரம் செய்ய. தகுந்த இடமென்று, அதை ஆக்கிரமித்துக்கொண்டார்கள்.

போக்கிரி கும்பலை எதிர்க்க வழியில்லாமல், கோபிநாத் தனது சொந்த இடத்திற்கு உரிமை கொண்டாடாமல் இருக்கிறார். இதை அறிந்த வேறொரு காண்டிராக்டர் மிஸ்டர் பாரத் அந்த நிலத்தைத் தனக்கு விலைக்குத் தரமுடியுமா? என்று கேட்கிறார் கோபிநாத்திடம் எனது சொந்த நிலம் என்னாலேயே அதற்கு உரிமை கொண்டாட முடியாமல் இருக்கிறது நீ என்ன செய்ய முடியும்? என்கிறார் அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை' நீங்கள் விலைக்குத் தர முடியுமா? முடியாதா என்கிறார் மிஸ்டர் பாரத். நான் விலைக்குத் தர தயார் உன்னால ஐந்து லட்சம் கொடுத்து வாங்கமுடியுமா? என்கிறார் ஐந்து லட்சம் தானே தருகிறேன் என்று ஐந்து லட்சத்திற்கு வாங்கி விடுகிறார்.

அந்த நிலத்திற்கு புல்டோசருடன் வந்து நிற்கிறான். மிஸ்டர் பாரத் அங்கிருந்த ரௌடிகளை எல்லாம் அடித்துப் பந்தாடி விரட்டுகிறான். அந்த இடத்தை இடித்து தரை மட்டமாக்கி விடுகிறான் மிஸ்டர் பாரத் ரௌடிகள் விரட்டப்பட்டு விட்டதை அறிந்து கோபிநாத் நிலம் தனக்கு தான் சொந்தம் என்று உரிமை கொண்டாடி வர எண்ணியும் பேசியபடி நடந்து கொள் என்று கூறி விட்டு நிலத்தை அங்கேயே ஏலம் விடுகிறான் மிஸ்டர் பாரத் தனது நிலத்தை விட்டுவிடமனமில்லாது ஏலத்தை ஏற்று பதினைந்து லட்சத்திற்குவாங்கி விடுகிறான் கோபினாத் நான் உன்னிடமிருந்து இந்த நிலத்தை ஐந்து லட்சத்திற்கு வாங்கினேன். நீ என்னிடமிருந்து அதே நிலத்தை பதினைந்து லட்சத்திற்கு வாங்கி இருக்கிறாய் நான் உனக்குத் தர வேண்டிய ஐந்து லட்சம் போக பாக்கித் தொகையான பத்து லட்ச ரூபாய் எனக்கு வந்து சேர வேண்டும் என்று சொல்லி விட்டு மிஸ்டர் பரத் சென்று விடுகிறான். தான் நன்கு ஏமாற்றப்பட்டு விட்டதை நினைத்து தலை குனிகிறான் கோபிநாத்.

பயங்கரமான சண்டைக் காட்சியுடன், இந்த ருசிகரமான காட்சியும் வாஹினி ஸ்டுடியோவில் படமாக்கப் பட்டது. இதில் மிஸ்டர் பாரத்தாக ரஜினிகாந்தும், கோபிநாத்தாக சத்யராஜும், ரஜினிகாந்த்தின் நண்பராக கவுண்டமணியும், இருபதுக்கும் மேற்பட்ட ஸ்டண்ட் நடிகர்களும் நடித்தனர். ஜூடோ ரத்தினம் சண்டைப் பயிற்சி அளிக்க ஒளிப்பதிவாளர் வினாயகம் மூலம் படமாக்கப்பட்டது. பாலசுப்பிரமணியம் அண்கோ தயாரிப்பான ஏவிஎம்மின் மிஸ்டர் பாரத் வண்ணப்படத்திற்காக படப்பிடிப்பில் ஈடுபட்டிருந்த டெக்னீஷியன்களே பிரமிக்கும் வண்ணம் பயங்கரமான சண்டைக்காட்சிகள் படமாக்கப்பட்டது.

இப்படத்தில் மற்றும் அம்பிகா, எஸ். வி. சேகர் விஜி, தீபன் ஆகியோருடன் ஊர்வசி சாரதாவும் நடிக்கிறார். எம். சரவணன் எம். பாலசுப்பிரமணியன் எம் எஸ் குகன் இணைந்து தயாரிக்கின்றனர்.

எஸ். பி முத்துராமன் டைரக்ஷனில் உருவாகும் இப்படத்தின் கதை வசனத்தை விசு எழுதுகிறார். இளையராஜா இசையமைக்கிறார்.

## திருமகள் வந்தாள்

ஸ்ரீகற்பகாம்பிகா மூவிஸ் 'திருமகள் வந்தாள்' என்ற பெயரில் புதிய படமொன்றைத் தயாரித்து வருகிறது. இதன் தொடக்க விழா ஏ. வி. எம். ஸ்டுடியோவில் பாடல் பதிவுடன் நடந்தது. விழாவிற்கு பாக்கியராஜ், நேதாஜி, மனோரமா, நம்பியார் மற்றும் கலையுலக பிரமுகர்கள் பலர் கலந்து கொண்டு விழாவை சிறப்பித்தனர். முதல் நாள் பதிவான பாடலை மலேசியா வாசுதேவன், வாணிஜெயராம் பாட, சங்கர் - கணேஷ் இசையமைத்தனர்.

கதாநாயகியாக அம்பிகா இதுவரை நடித்திராதமாறுபட்ட வேடத்தில் நடிக்கிறார். மற்றும் 'நிழல்கள்' ரவி, நம்பியார், தேங்காய் சீனிவாசன், ஐசரிவேலன், கணேஷ் (சங்கர்), மனோரமா, வசந்தா ஆகியோர் நடிக்கிறார்கள்.

ஜக்கு கதைக்கு, ஆர். செல்வராஜ் வசனமெழுத, கணேசபாண்டியன் ஒளிப்பதிவு செய்ய, ஏ. ஜெகந்நாதன் டைரக்டு செய்து வருகிறார்.



## ராஜேஷ் குழந்தையை கொல்லத் திட்டம்

ராஜேஷ் கோடி கணக்கான சொத்துக்கு அதிபதி. அவருக்கு குழந்தை பிறந்து விட்டால் தாங்கள் அனாதையாகி விடுவோமோ என்று பயந்து ராஜேஷின் சிற்றன்னை ஒய். விஜயாவும் அவள் மகன் வினோத்தும் சதி திட்டம் தீட்டி ராஜேஷின் மனைவி சுதா சந்திரன் கருவை கலைத்து விட்டனர். சுதா சந்திரன் அம்மன் அருளால்தேவி என்ற குழந்தையை பெற்றாள். அந்த தேவியையும் கொல்ல முயற்சி செய்கின்றனர். கடைசியில் ஒய். விஜயா தன் தவறுகளை உணர்ந்துதிருந்துகிறாள். ஆனால் அவள் மகன் வினோத் எவ்வளவோ புத்திமதி சொல்லியும்கேளாமல், தன் தாயை எட்டி உதைத்து விட்டு குழந்தை தேவியை தூக்கிக் கொண்டு தலைக்கோணம் காட்டிற்குச் சென்றான். அங்கே தான் ஏற்பாடு செய்து வைத்திருந்த சிறுத்தையின் மீது குழந்தையை தூக்கிப் போட்டான். சிறுத்தை கோபம் கொண்டு 16 அடி தூரம் பாய்ந்தது. அது யார் மீது பாய்ந்தது என்பதை பிரீத்தி இந்தர் கம்பைன்ஸ் 'சர்வம் சக்தி மயம்' படத்தில் தெரியும்.

திகிலூட்டும் இந்த காட்சியை திருப்பதிகருகில் உள்ள தலைக்கோணம் காட்டில் படமாக்கப்பட்டது. மேலும் அங்கே அம்மன் சிங்க வாகனத்துடன் தரிசனம் தரும் காட்சியும் படமாக்கப்பட்டது.

இப்படத்தில் ராஜேஷ் சுதாசந்திரன், ஒய். விஜயா பபிதா, ராதாரவி வினோத் ராமகிருஷ்ணன் டி. எஸ். ராகவேந்தர் குழந்தை கல்யாண பிரசன்னா ஆகியோர் நடிக்கின்றனர். ஒளிப்பதிவு பாபு, கதை வசனம் டைரக்ஷன் பி ஆர் சோமசுந்தர் இசை, தயாரிப்பு பென்சுரேந்தர்.

## வளையாத கோடுகள்

ஸ்ரீசர்வசக்தி சித்ராவின் 'வளையாத கோடுகள்' என்ற வண்ணப் படத்திற்காக கோவாவில் படப்பிடிப்பு நடந்தது.

இப்படத்தில் எம். என். ராஜம், மூர்த்தி, கதிரவன், சசிகலா, அனுராதா மற்றும் பலர் நடிக்கிறார்கள்.

எம். சஞ்சீவி வி. கே. ரமேஷ் ஸ்ரீநிவாஸ் மூவரும் கூட்டாகத்தயாரிக்கும் இப்படம் ஒரு குறுகிய கால வெளியீடாகும்.

★★ ரஜினிகாந்த் - ஸ்ரீதேவி
படம்: நான் அடிமை இல்லை

## இந்தவார... இயக்குனர்

பட்டிதொட்டி எங்கும் இன்றும் ஒலிபரப்பாகிவரும் என்னடி முனியம்மா என்ற பாட்டுஇடம்பெற்ற 'வாங்க மாப்பிள்ளை வாங்க' படத்தில் கதாநாயகனாக நடித்ததோடு அப்படத்தை இயக்கியதன் மூலம் தமிழ் திரையுலகில் பிரபலமானவர் இயக்குனர் சிவசங்கர் இப்போது "மீண்டும்நீ" படத்தை இயக்கி வருகிறார். அவரது திரையுலக அனுபவங்கள்பற்றி கேட்டபோது அவர் கூறியவற்றை இங்கு தொகுத்து வழங்குகிறோம்.

கேள்வி:- தாங்கள் சினிமாவுக்கு வந்தது எப்படி?

பதில்:- எனது 14 வயதில் என்னுடைய நண்பர் பழனி என்பவர் புதிய பறவை படத்தில் ஒரு வேடமிருக்கிறது வா என்று அழைத்து வந்தார். அப்படத்தில் ஒரு சிறிய ரோலில் நடித்தேன். அதன் பின் 'கதாநாயகன்' என்ற படத்தை நண்பர் சிலருடன் சேர்ந்து வாங்கினேன். இரண்டு மூன்று மாதங்களாகியும் அந்தப் படம் எங்களுக்கு திரப்படவில்லை. இப்படி ஒரு குழப்பமான நிலை ஏற்பட்டது. அதன்பின் வாக்குறுதி படத்தை தயாரித்தோம். அதிலிருந்து சினிமா உலகில் ஒரு பிடிப்பு ஏற்பட்டது.

கேள்வி: எத்தனை படங்களில் நடித்துள்ளீர்கள்?

பதில்: ஏராளமான படங்களில் நடித்துள்ளேன். அன்பு ரோஜா, துணிவே துணை, ஆறு புஷ்பங்கள், ஆட்டுக்கார அலமேலு, ஆயிரத்தில் ஒருத்தி, கன்னி மகமாயி, வாங்க மாப்பிள்ளை வாங்க இப்படி பல படங்களில் நடித்துள்ளேன் ஆனால் சிவசங்கர் என்பது தெரிந்தது வாங்க மாப்பிள்ளை வாங்க படத்தின் மூலம் தான்.

கேள்வி: தற்போதைய சினிமா உலகம்பற்றிதங்கள் அபிப்ராயம் என்ன?

பதில்: தற்போது தயாரிப்பு செலவு எக்கச்சக்கமாக உயர்ந்துவிட்டது. ஆனால் அந்த அளவிற்கு படம் விற்கப்படுகிறதா என்றால் இல்லை. படம் பெரிய அளவில் வெற்றியை பெற்றால் தான் லாபம் வரும். ஓரளவு ஓடினால் கூட கையை கடிக்கும் நிலைதான் உள்ளது.

மேலும் அந்தக்காலத்தில் படமெடுக்க அதிகப் பணம் கூட தேவை இல்லை. முதலில் சிறிது எடுத்து விட்டால் பின்பு பைனான்ஸ் வாங்கி படமெடுக்கலாம். ஆனால் இன்றுபடம் எடுத்து முடித்தாலும் விற்கமுடியாத நிலை தான் உள்ளது.

தமிழ் படவுலகம் மீண்டும் மறுமலர்ச்சி பெற வேண்டுமானால் அரசுதான் உதவி செய்ய வேண்டும். கர்நாடக மாநிலத்தில் இருப்பது போல் நிதி உதவி தர வேண்டும். இன்று பல தமிழ் பட தயாரிப்பாளர்கள் கூட கன்னடப் படம் எடுக்கச் செல்கின்றனர். இப்படியே நிலைமைபோனால் தமிழ்படம் எடுக்க ஆளே இல்லையோ என்ற நிலை கூட உருவாகலாம்.

தமிழ்பட தயாரிப்பாளர்களுக்கு திரைப்பட வர்த்தக சபையே கூட கட்டுதவி செய்யலாம். இதை ஏன் செய்ய மாட்டேன் என்கிறார்கள் என்பது தான் புரியவில்லை.

கேள்வி:— அரசு உதவி செய்ய வேண்டும் என்கிறீர்களே அரசுதான் ஒட்டு மொத்தவரி போன்றவற்றை கொண்டு வந்து உதவுகிறதே?

பதில்:— ஒட்டு மொத்த வரி மிகவும் நல்லதுதான் மற்ற இடங்களில் சதவீத வசூல் என்ற முறை இருப்பது போல் சென்னைக்கும் அதைக் கொண்டு வர வேண்டும் அப்போது தான் தயாரிப்பாளர்கள் பலன் பெறமுடியும்.

கேள்வி: மீண்டும் நீ படக் கதை என்ன?

பதில்: அறிவை நம்பும் அண்ணன், வீரத்தை நம்பும் தம்பி. தம்பி மீது அளப்பரிய பாசம் கொண்ட அண்ணன் அவன் விருப்பப்படியே எல்லாம் செய்து வரும் வேளையில் அண்ணனின் மனைவி செய்யும் குழப்பத்தால் குடும்பப் பிளவு படுகிறது. மீண்டும் உண்மை தெரியும் போது அண்ணன் இறந்து விடுகிறான். அண்ணன் மனைவியும் விபத்துக்கு ஆளாகிறாள்.

பூபதி, மனோரமா, ஜெயமாலா, ஐசரி வலன் குலதெய்வம் ராஜகோபால் தேங்காய் சீனிவாசன், சச்சு சுமித்ரா, கவுண்டமணி இவர்களுடன் தேவி என்ற புதுமுகமும் அறிமுகமாகிறார். நானும் நடிக்கிறேன்

கே: பொதுவாக எந்த மாதிரி படங்களை எடுக்க விரும்புகிறீர்கள்?

ப: கிரைம், சண்டைக் காட்சி இவைகள் உள்ள படங்களைத்தான் அதிகம் எடுக்க விரும்புகிறேன். தயாரிப்பாளர்கள் விரும்புவதால் குடும்ப கதையை எடுக்கிறேன்.

கே: உங்கள் படத்தின் மூலம் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?

ப: உண்மைக்கு அழிவில்லை என்பது அசைக்க முடியாத நம்பிக்கை. தவறு செய்பவர்கள் நிச்சயம் தண்டிக்கப்படுவார்கள். மனச்சாட்சிப்படி மனிதன் வாழ வேண்டும். இதுபோன்ற கருத்துக்களை சொல்ல விரும்புகிறேன் அறிவுரையோடு ரசிக்கத்தக்கதாகவும் படம் இருக்கவேண்டுமென்று விரும்புகிறேன்.

இவ்வாறு சிவசங்கர் கூறினார்.

தயாரிப்பாளர்களிடம் ஆசை வார்த்தை காட்டி ஏமாற்றுவது தனக்கு பழக்கமில்லை. என்றும் இருக்கும் நிலையைச்சொல்லி ஒருவேளை நஷ்டம் வந்தால் தயாரிப்பாளர் தாங்குவாரா என்பதை தெரிந்த பிறகே படத்தை இயக்க இவர் ஒப்புக் கொள்கிறாராம் மீண்டும் நீ படம் தனக்கு ஒரு நிலையான இடத்தை பெற்றுத்தருமென்றும் கூறுகிறார்.

சிவசங்கர்

## முடுமந்திரம் (நாடகம்)

'நலம் நலமறிய ஆவல்' 'விலாங்கு மீன்' ஆகிய படங்களுக்கு வசனமும், 'வீட்டுக்காரி' படத்திற்கு திரைக்கதை வசனமெழுதியவர் எஸ். கஜேந்திரகுமார், இவர் எழுதி, இயக்கி, நடிக்கும் புதிய நாடகம் 'முடுமந்திரம்' அனுஷா கிரியேஷன்ஸ் சார்பாக எஸ். கண்ணன் தயாரித்திருக்கிறார்.

'முடுமந்திரம்' நாடகம் சென்னை கலைவாணர் அரங்கில் நடந்தது. இந்த நாடக விழாவில் அமைச்சர் ராசாராம் கலந்து கொண்டு பேசுகையில் "நகைச்சுவையை கருத்தோடு அளித்து கவலையை மறந்து சிரிக்க வைக்கிறார் கஜேந்திரகுமார்" என்று பாராட்டிப் பேசினார்.

இந்த நாடகத்தில் எஸ். கண்ணன், கிருஷ்ணராவ் சிங்காரம், லட்சுமி, பாமா ஆகியோர் நடிக்கிறார்கள்.

★★ ராஜேஷ்-ரேவதி
படம்: இலங்கேஸ்வரன்